# ஆறு

உபேன்தான் அந்த யோசனையைச் சொன்னான். பஸ் நிறுத்தத்தில் கூட்டம் வந்து தாக்கியது. ஆறு மணி நாழிகை போய் உட்கார இடம் ஏதுமில்லை. இன்னொரு முறை இருமல் குறுக்கிடும் அந்தத் தமிழ்ப் பாட்டைக் கேட்டால். வாந்தியெடுத்தே உயிர் போய்விடும் என்று தோன்றியது. அடி வயிற்றில் ஒரு முடிச்சு இறுகியது.

"தரு, பக்கத்தில்தானே அந்த ஆறு இருக்கிறது. போகலாமே," என்றான். தரு யோசித்தாள். ஆறுகளைப்பற்றி அதிகம் தெரியாது. ஒரு சிறு சதுரக்குழியின் கீழே நீரைக் காட்டி "இதுதான் காவிரியின் மூலம்" என்று காட்டப்பட்டது அவளுக்குப் பத்து வயதில். அப்போது தான் அட்டை ஒன்று அவள் தொடையில் ஒட்டிக்கொண்டது. அதைச் சிகரெட்டால் சுட்டுப் பிடுங்கி எடுத்தபோது ரத்தமாய் வந்தது. ரத்தம் அவளுக்கு நினைவிருந்தது. எங்கோ ஒரு கீழ்த் தளத்தில் ஆறும் ரத்தமும் ஒன்றிவிட்டன. வேறு வகையில் ஆறு அவளைத் தொடவில்லை.

ரயிலில் போகும்போது கீழே, முடியில் வைக்கும் நாடாவைப் போல மெலிந்தோ பல தலைகள் கொண்ட ராவணன் மாதிரி தன்னை விஸ்தரித்துக்கொண்டோ போகும் ஆறுகளைப் பார்த்திருக் கிறாள். ரயிலின் கம்பி ஜன்னல் ஊடே, பாலத்தின் கடகடக்கும் இரும்புத் தூண்களின் இடையில் விட்டுவிட்டுக் கண்ணில் பட்டது தான் அவள் கண்ட ஆறுகள்.

முழு ரூபமற்றவை.

மாய நீல வரிகள்; அடி மண் தெரியும் பழுப்பு; பாசிப் பச்சை; துணி துவைத்த சோப்பு நுரையுடன் சாக்கடைக் கறுப்பு ... இப்படிச் சில தோற்றங்களை ஆறு என்று கூட்டி இணைக்க முடியவில்லை.

"என்ன யோசிக்கிறாய்?"

"சரி, வா."

ஆற்றங்கரையை அடைந்தபோது வெகு சிலரே அங்கிருந்தனர். ஆண்கள் சிலர் தூரத்தில் நீந்திக்கொண்டிருந்தனர்.

ஐந்தாறு பெண்கள் துவைத்துக்கொண்டிந்தனர்.

கருஞ் சாம்பல் நிறத்தில் ஆறு இருந்தது. நீலச் சாயைகளுடன்.

கரையில் உட்கார்ந்தனர்.

அந்தப் பெண்களைப் பார்த்தாள். எதற்கோ சிரித்தனர். சிரித்தவாறே கல்லில் துணியை ஓங்கிஓங்கி அடித்தனர். ஒருத்தி ஒரு சிறு கல்லில் மஞ்சளைத் தேய்த்தாள். கண்ணாடி வளையல்கள் மேலும் கீழும் ஏறி இறங்கின. மஞ்சளை வழித்துக் கன்னம், அக்குள், பாதம் என்று பூசிக்கொண்டாள். ஒரு சிறு எம்பலுடன் ஆற்றுக்குள் முழுகி ஓரடி தூரத்தில் தலைதூக்கினாள். மீண்டும் முழுகி இன்னும் சற்றுத் தூரத்தில் வெளிவந்து இரண்டு கைகளையும் உயரே தூக்கிச் செவிகளுக்கு அருகிலிருந்து தொடங்கி முடியிலிருந்து ஒழுகும் நீரைப் பக்கவாட்டில் ஒதுக்கினாள். மெல்ல. ஏகப்பட்ட நேரம் அவளிடம் இருப்பது போல.

தரூ அவள் இடுப்பைத் தழுவி ஓடும் ஆற்றைப் பார்த்தான்.

"தரூ, ஆற்றில் இறங்கலாமா?"

உபேன் கால்சராய் எல்லாம் கழற்றிவிட்டு ஆற்றில் இறங்கத் தயாராக இருந்தான்.

"நீ முதலில் இறங்கு."

சற்றுத் தள்ளிப்போய் ஆற்றில் இறங்கி, அளைந்தவாறே நடந்து பின், நீந்தத் துவங்கினான்.

ஆறு, சந்நியாசி மாதிரி அதனுள் நடக்கும் அத்தனை வேலைகளையும் ஈர்த்துக்கொண்டு, பங்கப்படாமல், துகள்களாகச் சிதையாமல், ஓடிக்கொண்டிருந்தது. அந்த உறுதி உள்ளே இருந்த இறுக்கங்களைத் தளர்த்தியது.

ஒரு சிறு மூங்கில் பெட்டியில் குழந்தையை இட்டு ஆற்றில் மிதக்க விட்ட இதிகாசப் பெண்கள் ஆற்றை வெறித்துப் பார்த்திருப்பார்கள். பின் அதை நம்பித்தான் அந்த மூங்கில் பெட்டியை நீரில் வைத்துக் கையால் பலமாக உந்தியிருப்பார்கள். மூங்கில் பெட்டி மிதந்துமிதந்து போகும்போது ஆறு தன் ரூபத்தை மாற்றிக் கொண்டிருக்கும். அது ஆறு இல்லை. வாழ்க்கையின் ஆதார நீர். கருப்பை நீர். சிறு கரு மிதக்கும் நீர். ஆறு அதன் பௌதிக நீட்சிதான்.

ஆற்றைப் பார்த்தாள்.

பாதுகாப்பான இடமாகத் தோன்றியது. தெம்புடன் பற்றிக் கொள்ளக்கூடிய விள்ளாத ஒன்று.

பையைத் திறந்து ஒரு லுங்கியை வெளியே எடுத்தாள். அதை மார்பில் கட்டிக்கொண்டு உடைகளைக் களைந்தாள்.

ஆற்றில் கால்களை இட்டாள். மடமடவென்று இடுப்புவரை நீர் ஓட நின்றபோது பாதங்கள் குறுகுறுத்தன. மீன்கள்! காலைக் கடிக்கின்றன. கீச்சென்று கூச்சலிட்டுத் தலையைப் பின்னால் சாய்த்துச் சிரித்தாள் உரக்க. 'மளக்' கென்று நீரில் முங்கி எழுந்தாள். நீரில் அளைந்தபடி நடந்தாள். ஆறு அவள் மேல் மெல்லப் படர்ந்தது. கால்களை உதைத்துஉதைத்து அதில் மிதந்தாள். முதுகுப்புறம் சாய்ந்து மேலே பார்த்தபோது சூரிய ஒளி கண்ணில் அடித்தது. மீண்டும் சிரிக்கத் தோன்றியது.

